ஸ்ரீ:

கடவுள் துணை

# [illegible]தர் நீதிக் கலிவெண்பா

---

இஃது

தென்னாற்காடு ஜில்லா வளவனூருக்கடுத்த வி. பூதூர்

கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்களால்

இயற்றப்பெற்று



விழுப்புரம்

ஹநுமான் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது

1933



[விலை 1½ அணா

# முன்னுரை

"மாதர்நீதிக் கலிவெண்பா" என்னும் சொற்றொடர் மாதர் நீதிகளைக் கலிவெண்பாவாற் கூறப்பெறும் நூல் எனப் பொருளாம். இந்நூலைத் தாய் மகளுக்குணர்த்துமுறையாகப் பல நூல்களினின்றும் திரட்டிய நீதிகளைச் சேர்த்துக் கூறியிருக்கிறேன். திருவருள் தூண்ட, இது இக்காலத்துக்குப் பெரிதும் பயன்படுமெனக் கருதி வெளியிடத் துணிந்தேன். இது ஆண் பெண் இருபாலாரும் கற்றுணரத் தகுந்தது. சிறுவரும் எளிதில் உணரலாகும். எல்லோரும் நன்கறிந்து அதன்படி நடப்பதே இம்முயற்சிக்குப் பெருங் கைம்மாறாகும்.

இதை அச்சிடுங்கால் துணையிருந்துதவிய வளவனூர் குமாரபுரி திருவாளர் நா. வேணுகோபால் பிள்ளை அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

இந்நூலை அச்சுவாகனமேற்றப் பொருள் உதவி செய்த கனவான்களின் நன்றி மறக்கற்பாலதன்று.

வி. பூதூர்,
10—4—1933

கி. வேங்கடசாமி

## பொருளுதவி செய்தவர்கள்.

ஸ்ரீயாந். கூ. சு இராமகிருஷ்ண செட்டியார் அவர்கள்,
இளங்காடு ரூ. .... 5—0—0

,, சே அ. ராமுடு செட்டியார் அவர்கள்,
புராணசிங்கபாளையம் ரூ. .... 5—0—0

,, பூ. ரா. கோபாலுசாமி முதலியார் அவர்கள்,
வில்வாரயநத்தம் ரூ. .... 10—0—0

,, ர. மாணிக்கக் கவுண்டர் அவர்கள்,
வி. பூதூர் ரூ .... 5—0—0

வடவேங்கட வண்ணமஞ்சரி அச்சிட்டதில் மிகுதி ரூ. .... 5—0—0

ஆக ரூ. .... 30—0—0

## உரிமையுரை.

இந்நூலை எனது திருத்தாயார்

"எதிராஜ அம்மாள்"

அவர்களது இணையடிக் கமலங்கட்கு

மிக்க பணிவுடன்

உரிமையாக்குகின்றேன்.

கி. வேங்கடசாமி

ஸ்ரீ :

# சிறப்புப்பாயிரம்

---

திருவாமாத்தூர் கௌமார மடாலயம்

## ஸ்ரீமாந், தி. மு. செந்திநாயகம்பிள்ளையவர்கள்

இயற்றியன

### கட்டளைக்கலித்துறை

பூதூரில் வேங்கட சாமிப் பெயர்கொள் புலவன்மின்னூர்
மீதூர்நன் னீதி சொலுங்கலி வெண்பா விளம்பிமருட்
கோதூர் நடையறத் தந்தனன் வேம குலத்தவமாய்
வாதூர் மனந்தவிர்ந் தோன்கிட் டிணத்தந்தை வண்சுதனே (1)

### வெண்பா

கலிவெண்பா வொன்றிற் கவின்மாதர் நீதி
நலிவின்றித் தாய்மொழியா னாட்டிச்—சொலியின்பங்
கண்டா னியல்வேங் கடசாமி ரெட்டியென்பான்
விண்டா ரணிமகிழ வே (2)

---

சென்னைப் பன்மொழிக் கழகம் தமிழ் ஆராய்ச்சியாளர்

## ஸ்ரீமாந், வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள்

இயற்றியன

### அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

சான்றவர்வாழ் திருத்தொண்டை நன்னாட்டிற் பூதூரைச்
சார்ந்து வாழ்வோன்
ஆன்றதவம் முன்புரிந்தோன் கிருட்டினரெட் டிந்திரனா
னளித்த மைந்தன்
தேன்றிகழ்சொல் தெலுங்கினொடு செந்தமிழி னியல்புமுறத்
தெரிந்தோ னெம்மாற்
கேன்றதனி யன்புடையோன் எழிலுறுவேங் கடசாமி
என்னும் பேரோன் (1)

ஆதரவிற் பலநூல்க ளாராய்ந்து மாதர்களுக் கமைந்த வாய
நீதிகளைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்தானோர் நூல்மாதர் நீதி யென்னக்
காதலுட னிதையோதுங் காரிகையார் நல்லியல்புங் கற்பும் வாய்ந்து
மேதையராய் மைந்தரையும் நன்னெறியிற் பயில்வுறுத்தி விளங்கு வாரால் (2)

---

திருநெல்வேலி "ஸ்ரீ வைஷ்ணவன்" பத்திராதிபர்

## ஸ்ரீமாந். T. R. பெரியநம்பியா பிள்ளையவர்கள்

இயற்றியன

எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மதுகரமுரலும் மலர்ப்பொழிற் பூதூர் வதிதரு மதியுடைப் பெரியோன்
துதிகொள்வேங் கடசாமிப்பெயர்ப்புலவன்தோகைமாரொழுகுமம்முறையை
இதமுறக் கலிவெண் பாவினி லெளிய வினியசெந் தமிழ்நடைமுறையில்
உதவினன் முன்னோர் மொழிவழி தழுவி யுவர்ப்பின்றி யுவப்புறமாதோ (1)

மக்களுண் மாறு தருவன முன்னோர் வழங்கினு மொழுங்கலவென்னிற்
றக்கன நாடி யிதம்பெற நிறுவுந் தகைமைசான் றவர்க்கியல்புடைத்தாம்
அக்குறை யகற்றிக் கவிநலங் கனிய வாற்றிய வாற்றனன் காய்வார்க்
கெக்குறை தோன்று மெய்க்குறை விடமா யியைந்திடு மிவற்கிணையாரே (2)

---

வளவனூர் குமாரபுரி

## ஸ்ரீமாந், தேசிக-சடகோபபிள்ளையவர்கள்

இயற்றியது

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வேதபோ தத்துறையும் வித்தகனைச் சுடரொளியை விமலரேத்த
ஏதமிக் கிட்டவனைப் பணிபூதூர் கிருஷ்ணரெட்டி யேந்தரோன்றல்
கீதமார் விற்பனன் வேங் கடசாமி விருப்பமுடன் கிளக்குமிந்த
மாதர்நீ திக்கலிவெண் பாவினையார் கண்டுநனி மகிழாதாரே

---

கூடலூர்த் தாலுகாப் பள்ளிப்பட்டுத் தமிழ் உபாத்தியாயர்
ஸ்ரீமாந், சா. நா. வீரப்ப முதலியாரவர்கள்
இயற்றியது

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பூமேவும் வனிதையர்த மடமை நீங்கிப்
புகழுடனில் லறம்புரிந்து புண்ய மெய்த
நாமேவுங் கலிவெண்பா வதனு னீதி
நவின்றளித்தான் றிருமாதெந் நாளும் நீங்காக்
காமேவும் பூதூர்வாழ் கிருஷ்ண வேட்குக்
கான்முளையாய் வந்துபல கலைக ளாய்ந்தோன்
தேமேவும் வேங்கடசா மிப்பா வல்லோன்
தேன்பாகும் கைத்திடவே தேயத் தோரே

---

வளவனூர் குமாரபுரி எட்வர்ட் பாடசாலைத் தலைமை உபாத்தியாயர்
ஸ்ரீமாந், மு. நடேசபிள்ளை அவர்கள்
இயற்றியது

### ஆசிரியப்பா

வானிற வளையுந் தூநிற முத்துஞ்
சூனிறை ஞெண்டுந் தானுற வொதுக்கும்
கரையுறக் கொண்ட பரவையைப் புகலும்
உடையெனக் கொண்டே வோங்குமிப் புவியில்
நடையழிந் தினையும் நங்கையர் தமக்கோர்
புணையெனப் படூஉம் போதமிக் குடைய
இணையறு யாப்பு மேதமற் றுளிருபு
தந்தனன் மாதர் தாமுறு நீதியை
முந்தையோர் சொல்லிய முறைகளு மோர்ந்து
கண்பா ரேத்தக் காசக லுங்கலி
வெண்பா அதனுல் மேவிய வண்டர்

தாதுக வூதித் தாமரைத் துயிலும்
தீதறு நன்னீர்த் திருவமர் குளனும்
செங்காற் குருகு தேடிய மச்சம்
பைங்கா னத்துறை பேடையும் பார்ப்பும்
மாந்திடக் கொடுத்து மனங்களிப் புறீஇச்
சேர்ந்துட னுறையும் செய்யுந் தாமரை
மாதூர் மறுகும் மாடமும் பொலியும்
பூதூ ரதனிற் புக்ழுபு வரூஉம்
செயற்கரு செய்கை செய்திடு மேலோர்
நயத்திடு கேண்மை நண்ணிய பண்போன்
சீரோன் செல்வஞ் சிறந்திடு கிருஷ்ணப்
பேரோன் தவத்திற் பிறந்திடு சீலன்
ஆயநற் கலைக ளறிந்தனு தினமும்
மாயனைப் பணியும் மதிமிகப் பெற்றுத்
தீங்கடு மறிவிற் சிறந்த
வேங்கட சாமிப் பேருடை வேளே

---

பள்ளிகொண்டாபுரம் - ஆசிரியர் பிரபந்த வித்வான்

## ஸ்ரீமாந், மா. வேங்கடகிருஷ்ணப்பிள்ளை அவர்கள்

இயற்றியன

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மணியாழி சூழுலகின் மங்கையரா வில்லறநல் லறமா மென்றே
துணியாழி மறையுரைக்கு மம்மொழிக்கு மடமாதர் சுகுண ராகிப்
பணியாதி பதிக்கியற்ற நற்றூய்தன் மகட்கிசைக்கும் பான்மையாக
எணியாதி கற்பணியைக் கலிவெண்பா யாப்பதனி லிசைத்திட் டானல் (1)

அத்தகைய நூல்செய்தோன் பெடைக்குருகு தன்சினையா வயிர்த்துப் புல்லி
நத்தினிய நித்திலத்தைச் சிறகினணைத் தடைகிடக்கும் நன்னீர்ச் செய்யில்
வித்தம்விளை பூதூர்வாழ் பண்டகுல சுகுணகிஷ்ண வேளின் றோன்றல்
மெத்துபுல வர்க்கினியன் வேங்கடசா மிப்பெயர்கொள் விவேகன் றானே (2)

---

ஸ்ரீ :

# மாதர் நீதிக் கலிவெண்பா

## நம்மாழ்வார் துதி

### வெண்பா

பண்மொழியார் நீதி பரிந்துகலி வெண்பாவிற்
றண்மொழியாற் சொல்லிடமுன் சாருமே—கொண்மூ
உருவத்தன் சீர்த்தியே வோதுகுரு கூரில்
மருவத்தன் தாட்டா மரை

## வரலாறும் அவையடக்கமும்

அன்பார்ந்த தன்மகளுக் காய்ந்தெடுத்த நன்னீதி
இன்பார்ந்த மாதா வியம்புதல்போல்—முன்பார்ந்த
பேரறிவோர் தம்முன்னே பேதை பிதற்றினேன்
ஆரறிவோர் எள்ளா ரறிந்து

## நூல்

சீர்பூத்த பாற்கடலிற் சோராத இன்னமுதே
ஏர்பூத்த மஞ்ஞை யியலியே—கார்பூத்த

மேனியன்தோள் சேராமே மேவுங் கமலையே
தேனியன்று பாகனைந்த தேமொழியே—வானியங்கும்

நங்கையர்கள் கண்டுமிக நாணும் வடிவழகீ
பங்கயக்கண் வாய்ந்ததொரு பாவையே—பொங்குமிக

வண்டுழுது தாதாடும் வண்கோதை மாதரசே
கெண்டைவிழித் துப்பிதழ்சேர் கிள்ளையே—தண்டையணி

காலுடையாய் விற்புருவக் காரிகையாய் நற்குணங்கள்
நாலுடையாய் மெய்யறிவு நன்றுடையாய்—மேலான

தக்ககுலத் தோர்மகளால் தந்தைகுலம் தாய்குலமும்
புக்ககுல மும்விளங்கும் பூவையே—மிக்கநூல்

நன்னீதி மார்க்கமெலாம் நன்றாய்த் தெரியினும்யான்
பன்னீதி சொல்வேன் பரிந்துகேள்—பொன்னும்

திருமடந்தை பார்மடந்தை தேசாரும் நீளைப்
பெருமடந்தை சீரிமயப் பெண்ணும்—அருமடந்தை

நான்மடந்தை யென்ன நவலுமிவர் பாதத்தின்
மேன்மடந்தாய் பத்தி விளைத்திடுவாய்—ஆன

பெருஞ்செல்வம் வந்தடையும் பேருளுநேன் மேலாம்
அருஞ்செல்வ மேயிஃ தறிவாய்—வருந்தியுனைப்

பெற்றோர்க் கிழிவாய பேர்வாங்கி வையாதே
உற்றோர்கள் யாரும் உகப்படைவர்—நற்றுணையாக்

கொண்டறிவி லாரோடு கூடிவிளை யாடாதே
அண்டியுனைக் கொண்டதோ ராணழகன்—தண்டாத

மாமிமுதல் மேலோர் சொல்வார்த்தை மறுத்துரையேல்
சாமியென அன்னவர்தந் தாள்வணங்கு—சேமமாய்த்

தேடியுனைக் கொண்டவன்தான் செய்திடே லென்றதனை
நாடிநீ செய்யாதே நங்கையே—வாடாதே

என்றும்நீ மேலோ ரெதிர்தனில் நில்லாதே
கொன்றன்ன தீவெகுளி கொள்ளாதே—நன்றேயெண்

தக்க அயலவரைத் தம்பி தமையனென்றும்
புக்க புருடனைநீ பொன்னனையாய்—மிக்க அருட்

டெய்வமென்றும் மற்றைத் திகழ்கின்ற மங்கையரை
மையி லுடன்பிறந்த மாதரென்றும்—கைதவமில்

மாமனையும் மாமியையும் மானேநீ யெங்களைப்போல்
சேமமாய்க் கொள்வாயுன் சிந்தையிலே—ஏமமுறும்

என்மகளே உன்கரத்தொன் றீயினுமீ யாவிடினும்
வன்மமோ டுன்பதிமுன் வாய்திறவேல்—நன்மனையில்

ஈதுண்டீ தில்லையென வேந்தலைப்பார்த் தியாதொன்றும்
வாதுமிகச் செய்திடேல் வண்குழலே—தீதென்றே

அத்தையார் கோபித்தா லாங்கணெதிர்க் காதவர்தாம்
வைத்ததொரு வேலை மகிழ்ந்தேசெய்—நித்தமுமே

கொண்டான் பாத்தையரைக் கூடிமகிழ்ந் தின்புற்றுத்
தண்டா துறையினனைத் தான்மறக்கின்—ஒண்டொடியே

என்பாக் கியமிதுவென் றெண்ணிக் கணவனுக்குன்
அன்பாக் கியசொல்லா லார்வமுற்று—நின்பால்

இருக்கச்செய் அல்லா லிழிசொல்லால் நெஞ்சம்
வெருக்கொளுமா றென்றும் விளம்பேல்—மருக்கமழுங்

கூந்தலாய் கேள்வன் குறித்ததுநீ தாயிருப்பின்
வந்தலே தீயதிதென் றெண்ணிச்சொல்—காய்ந்துனைத்

திட்டின் அடிக்கிற் சினக்கிற் கணவனொடு
வெட்டெனப் பேசேல் வெகுண்டுரைப்பின்—மட்டியிவள்

உக்கிர காளியென்றே ஊரெல்லாம் தூற்றிடுமால்
பக்கத்தார் யாரும் பரிகசிப்பர்—நற்கொழுநன்

உண்டதொரு சேடத்தை யுண்ணு தவமதிக்கிற்
பெண்டல்லை நீயவற்குப் பெய்தொடியே—தண்டுறைசேர்

காசியுறு கங்கைமுதற் காவேரி தீர்த்தமெலாம்
மாசிகந்து நின்றன் மகிழ்நனைத்தான்—நேசமாய்ப்

போற்றி வணங்கிப் புகழுமதில் நூற்றிலொரு
கூற்றும் பலனளியா கூர்மறையும்—சாற்றிடுமால்

ஆதலாற் பல்லோ ரறியவுனைக் கொண்டானைக்
காதலார் தெய்வமெனக் காணுவாய்—மாதரசே

உன்பெரியோர் போவென்ன உத்தரவு செய்யாமுன்
என்று மயல்வீட்டிற் கேகாதே—நன்மையிலாக்

கெட்டபேர் வாங்கித்தன் கேள்வனுக்குஞ் சார்ந்தவர்க்கும்
இட்டமறச் செய்வாள் இறந்திட்டால்—மட்டடங்கா

நச்சோ எனச்சொல் நமனார் தனதிடத்தில்
அச்சோ படுந்துயரம் ஆரறைவார்—இச்சையுடன்

உன்புத் திரர்களினும் ஓங்குமூத் தார்கொழுந்தன்
தம்புத் திரர்க்குத் தயவுசெய்வாய்—துன்பார்

இலம்பட்டான் கேள்வனேல் இன்சொல்லே யன்றிச்
சலம்பட்ட சொல்லொன்றும் சாற்றேல்—நலம்பட்ட

நின்கேள்வன் நெஞ்சறிந்து நேர்த்தியுடன் செய்வாயேல்
நன்காகும் நிற்புகழ்வார் நானிலத்தோர்—அன்பாகத்

தாய்வீடா மிவ்விடத்தைச் சாரேல் அடிக்கடிநீ
ஆயிழா யில்லென் றடைந்தோர்க்கு—வாய்திறந்து

சாற்றே லெதிர்மாற்றம் தக்கசெல வேசெய்து
மாற்றில்லா நற்பேர் வகித்திடுவாய்—தோற்றும்

இலைமறைகா யென்னநீ என்றென்றும் மேலோர்
சொலையறிந்து நின்றிடுவாய் சொன்னேன்—வலிய

பெரியார்மேற் சீற்றத்தாற் பிள்ளைகளைச் சீறி
அரியானை மேற்செல்லு மாறு—கரியகுழல்

நங்கையே துன்புறுத்தி நாட்டஞ் சிவந்திடேல்
சங்கையறக் கேள்வனும்நந் தம்வசமென்—றிங்கிதமாய்ச்

சான்றார்நெஞ் சுட்கச் சடசடெனப் பேசாதே
ஆன்றவுயி ரென்னநினைந் தன்பினால்—சான்ற

புருடனைத்தான் போற்றியிடிற் புண்ணியர்கள் போற்றும்
திருவளரும் மார்பனருள் சேரும்—பெருமைமிகும்

செல்வமுளா யானாலுந் தேயத்தார் தூற்றிடுவர்
நல்வழிசெல் லாவிடிலென் நங்கையே—பல்விதமாய்

ஆவல்மிகு நாதன்றான் பன்பருக்கும் சொற்றிடேல்
சேவை செயுந்தொழுத்தை செப்பியவா—றார்வமொடே

செய்திடினும் நம்பிக்கை சேர்ந்திடினும் அன்னவளைப்
பெய்தொடிக்கைப் பெண்பாவாய் பேதைமையால்—வையத்

தனியே யிருந்திநீ தானயலில் ஏகேல்
கனிவாகக் கைத்தொழிலைக் கற்பாய்—பனிசேரும்

மாலையிலும் காலையிலும் மன்னித் துயில்செய்யின்
சாலும் பெருஞ்சோம்பல் தான்மிகுமால்—சீலமல்ல

ஆதலால் அப்போ தயர்ந்துந் துயில்செய்யேல்
காதலால் வீட்டிலுள காரியங்கள்—போது

விடியாத முன்னே விரைந்துசெயல் வேண்டும்
திடமாயெக் காலும்வெளிச் செல்லேல்—கடிகமழும்

நாண்மலர்மென் கூந்தல் நடந்துலர்த்த லாகாது
பேணிமறைச் சொல்லைப் பிறர்க்குரையேல்—நாணுடையாய்

புத்திரரை நோயின்றிப் போற்றற் கியைந்ததொரு
நத்தும் சுகவழியை நாடுவாய்—எத்துணையும்

நெஞ்சில் விதனமுறின் நீங்காத நோயுண்டாம்
அஞ்ச லிலாநின் அருஞ்சிறுவர்க்—கெஞ்சாத

வீரமே யூட்டாது வீண்பயத்தைக் காட்டாதே
சாரமாங் காய்கறியின் தன்மையினை—ஒருவாய்

மக்களைநன் குண்பித்து வாழ்க்கை யெளியவாய்த்
தக்கனவே நாடித் தகவொடுசெய்—மிக்கநவ

தானியங்கள் பண்பினையும் தானறிந்து நேர்த்தியுடன்
ஈனமின்றி வாழ்க்கை யியற்றுவாய்—ஆன

சிறுவர்க் குறுநோயைத் தேர்ந்துடனே நீக்க
உறுமுயற்சி செய்தே யுணவின்—மறுவின்றிக்

கையாள நன்கறிந்து கற்புவழி நின்றிடுவாய்
மையாரும் வேல்விழிசேர் மானனையாய்—வெய்யதொரு

பேய்பிடித்த தென்னப் பிதற்றிவரு மானிடர்தாம்
தாயடுத்த தென்னத் தனித்துறுவார்—மாயமாம்

அந்தப் படிறர் அணுகா வகைதடுப்பாய்
விந்தைப்பே யுள்ளதெனும் வீண்வார்த்தை—சிந்தையினில்

கொள்ளாதே மேனாட்டார் கொண்டுவரு தீச்சாக்கைத்
தள்ளாத போன்பிற் றுன்விரும்பேல்—தெள்ளறிவோய்

நல்லாத் துணிவாங்கித் தன்னுடைய அங்கங்கள்
எல்லாந் தெரிய அணிந் தேயிருத்தல்—பொல்லாது

ஆடை யெதற்கா யணிவதென நன்கறிந்து
பீடா யுடுத்திடுவாய் பெண்ணரசே—நாடிக்

குறிப்பிடுகா லத்திற் குறிப்பிட் டதனை
மறுப்படா வண்ணஞ்செய் மானே—வெறுப்பாக்கித்

தேகத்திற் றீங்கு விளைத்திடும்மேற் றேய்வையினை
மேகத்தை நேர்குழலாய் வேண்டாதே—மாகத்தைத்

தாவுந் திரைமுதலாத் தான்காட்டித் தீங்குறுத்தி
மேவுநட னச்சாலை மேவாதே—ஆவலுடன்

உன்னை யகர்விட்டி லுள்ளாரா என்பார்க்கு
மின்னேநல் லன்பின் விடையளிப்பாய்—தென்னார்ந்த

கூந்தலினைச் சீவாதே கோணலுற நன்னகையாய்க்
காந்தன்றன் புன்னகையைக் காணுவாய்—சாந்தமுளோய்

எல்லார்க்கும் பூண்களுள எற்கொன்று மில்லையெனப்
பொல்லாத மூச்சுவிடேல் பொற்கொடியே—நல்லதன்றி

முன்னே துயர்வரிலோ மொய்குழலே பின்சுகமாம்
அன்னதற்குக் கைநெறியே லாருக்கும்—நன்மைதின்மை

வன்னவுவா வென்ன வருவதுவா ராதொழியா
மென்மையா யுன்வீட்டு வேலையினை—நன்மையாய்ப்

போட்டியினாற் செய்யாமற் பொன்னே இருக்காதே
வீட்டி லுளமறையை வேறொருவர்—வீட்டிலுமவ்

வீட்டி லுளமறையுன் வீட்டிலுஞ்சொன் னால்யார்க்கும்
வாட்டம் வரும்பகையும் வந்திடுமால்—கோட்டமுள

இம்மா திரிச்செய்கை யாதொன்றுஞ் செய்திடேல்
அம்மாபொய்ச் சத்தியமா யாணையிடேல்—சும்மா

நிலமதிரும் வண்ணமாய் நீட்டிநடக் காதே
கலகலெனக் காற்சிலம்பு கவ்வை—நிலவ

நடக்காதே பற்றெரிய நன்குநகைக் காதே
இடக்கான வார்த்தை யியம்பேல்—சடைக்குழலாய்

பூடணங்கள் மேவிடினும் பொன்மஞ்சள் குங்குமத்தால்
நாடி யலங்கரிக்க நாணாதே—கேடுமிக்க

பெண்டிரொடு நட்புசெயப் பேணேல் கிழத்தனத்தர்
மிண்டுமங்க வீனரொடு வெங்நோயர்க்—கண்டு

நகைத்திடேல் ஒன்றுதந்து நான்கைந்து வாங்கிப்
பகைத்திடேல் யாரிடத்தும் பாவாய்—வகுத்ததொரு

மேலோர்முன் பொய்க்கோள் விளைத்திடேல் பந்தியிலே
ஏலாத வஞ்ச மிழைத்திடேல்—மேலான

செல்வர் வறியரெனச் சிந்தையினி லெண்ணாதே
இல்லழுக்குத் தூசழுக்கோ டேர்குழல்மா—செல்லவர்க்கும்

நெஞ்சருவ ருக்கும் நெடிய தரித்திரமாம்
அஞ்சாந் தரைத்திடுநல் லம்மியினில்—விஞ்சியே

செப்புமுரல் திண்குழவி தேசா ரியந்திரத்தில்
தப்பில் உலக்கைவா சற்படியில்—எப்போதும்

மன்னி இருப்பினுங்கால் வைத்தே யிருந்தாலும்
அன்னையாம் செந்திருவு மாங்கிராள்—தன்னறியா

தோர்கால் பதம்பட்டா லொற்றிக்கொள் வாய் விழியில்
சேரார் விளக்கேற்றிற் செங்கரத்தில்—வாருமெண்ணெய்

தாக்காதோர் குச்சியினாற் றூர்குழலே தூண்டிடுவாய்
தேக்குமெண்ணெய் கைப்படிலோ தீதாகும்—சேர்த்ததொரு

நற்றலையில் தேய்த்துவழி நல்லெண்ணெய் மெய்த்தேய்க்கிற்
குற்றமா மென்றுரைப்பர் கூரறிவோர்—மற்றுன் இல்

சார்ந்த பொருளதனில் சாக்கிரதை யாயிருப்பாய்
ஆர்ந்தஅறி வோர்மீ தரும்பத்தி—சேர்ந்து

வறிஞர்மேற் பேரன்பு வைத்துமகிழ் காட்டி
அறிஞர்போல் வாழ்ந்திடுவா யம்மா—மறுவான

எச்சிற்பண் டத்தை எவர்க்குமிட லாகாது
நச்சும் பொருள்வரினும் நல்லவர்தா—மெச்சாக்

களவுசெயேல் கூண்டுக்குட் காணும் விளக்காய்
உளத்திற் சலனமின்றி யோங்கு—தளவநகை

மங்காய் விருந்தென்ன வந்தார்க் கிலையென்னேல்
அங்காந்து சோறென்னும் ஆதுலர்க்குப்—பொங்கன்பால்

இட்டுமகிழ் வெய்துவாய் ஈதே பெருந்தருமம்
நட்புடனே தெய்வம் நமைக்காக்கும்—இட்டமுடன்

நல்லாளென் றியாரும் நவிலவெகு நாள்செல்லும்
எல்லாந் தெரிந்திடுவா யேந்திழையே—பல்லார்முன் 95

தற்புகழ்தல் தீதாம் தணியாப் பசியெனினும்
முற்புசியேல் பந்தியினில் மொய்குழலே—கற்றோர்

வெறுத்தபெருஞ் செல்வத்தில் மேன்மையாய் உன்னிற்
சிறுத்தாரை நோக்கிமகிழ் தேக்கு—கறுத்தகுழல்

மாதர்க் கரசியே வன்சொல்நீத் தின்சொற்சொல்
தீதொருவர் மேற்செப்பில் தீதாகும்—கோதாம்

அகந்தையினால் நன்றா யறிந்தாரைச் சீறேல்
புகைந்தசினம் வந்தாற் பொறுமை—மிகுந்தநீ

உள்ளடக்கி மிக்க உவகையுட னேயிருப்பாய்
தள்ளிஒரு வர்க்கொருவர் சண்டையிடில்-பொள்ளென்ன 100

அவ்விடம்விட் டப்பா லமர்ந்திடுவா யெவ்வமறத்
திவ்வியமாம் வெள்ளிதினம் சீராகச்—செவ்வே

மெழுகிநல்ல கோலமிட்டுன் வீடதனை மிக்க
அழகாக வைத்திருப்பா யம்மா—அழுக்குகறி

தன்னை யெலிபூனை சார்பறவை வாய்வைத்த
அன்னமுத லெவ்வெவையு மார்ந்திடேல்—வன்னம்உள

வண்குறங்கின் மீதனத்தை வைத்துணினும் பேசிமிகப்
பண்பாய் நடந்துலவிப் பார்த்துணினும்—நன்றல்ல

தண்ணீர்க்குள் உன்சாயை தானோக்கேல் தூசின்றிப்
பெண்ணே யிறங்கேல் பெரும்புனலில்—உண்ணயந்து 105

நீந்துதலு மாகாது நீரை உழக்குதலும்
காய்ந்தகரி சாம்பர்மயிர் கல்முதல—வாய்ந்த

சலத்தி லெறிகுதலும் சாரு மிரண்டு
மலத்தை விடுதலுமே மாசாம்—நலத்தகையாய்

வாய்ந்தஇடக் கையாலும் வண்துகிலைத் தோய்த்ததனில்
ஏய்ந்தபுன லும்மருந்த லேலாவாம்—சேந்தொரு

கையுகிராற் காலுகிராற் காசினியைக் கீறாதே
வெய்ய இடம்பத்தால் வேறிடத்தில்—செய்யபணி

வாங்கியணி யாதேநீ வாங்கினையே னும்முடனே
ஓங்குபூண் தன்னையவர்க் கொப்புவிப்பாய்—தேங்கமழ்நல் 110

தாமருங் கூந்தலாய் தன்னகத்து வேலையின்பின்
சாரமாம் நன்னூல்கள் தான்படிப்பாய்—சோருகின்ற

சோம்பலென் றுங் கூடாது சொந்தப் பணிசெய்யத்
தேம்பவிலாக் கேள்வனொடு சேருங்கால்—ஆம்பல்நிகர்

செவ்வதரப் பால்மொழியாய் தேவாம்பை போற்சமயத்
தொவ்விமிகு மின்பத் துளமகிழ்வி—தெவ்வாஞ்சும்

ஆலோ சனைக்கே யரியதொர மாத்தியர்க்கு
மேல்யோ சனைகள் விளம்புவாய்—மேலாக

என்னிடத்தே யுற்ற இளையாய் தொழுத்தையெனப்
பின்னிடேல் வேலைசெய்யப் பேரறிவாய்—உன்னுடைய 115

சத்திக்குத் தக்க தருமம்செய் சாந்தத்தில்
நித்தம் புவிபோல நேர்மையுடன்—மெத்தஇரு

நீர்நிறைந்த ஆற்றை நிகரில் மாமதனைச்
சீர்நிறைந்த மஞ்சைச் சிவணவே—ஏரார்

இளையாய் எவர்க்கும் இயன்றவுப காரம்
கிளரன்பாற் செய்திடினே கீர்த்தி—வளரும்

இளங்கன்று கட்டியகொ டீர்க்கயிற்றைத் தாண்டேல்
வளங்குன்றா மிக்க மழையில்—களங்கமிலாய்

அங்குமிங்கும் ஓடி யலையாதே நோயுண்டாம்
எங்கள்குலத் தின்னமுதே யாரெனினும்—பொங்கிமிகச்

செய்தீமை யைமறந்து செய்நன்றி யுள்ளுவாய்
வைதாலும் உள்ளம் வருந்தமுறேல்—பொய்தன்னை

யெக்காலும் சொல்லாதே இன்பமிலை மற்றதனில்
மைக்கா லுமின்னனைய மாதரசே—மிக்கான

வெற்றிலையிற் கீழ்விழுந்த வெள்ளியசுண் ணாம்புவைத்த
உற்றிடுமா சைப்பெருக்கா லுட்கொள்ளேல்—மற்றும்

ஆரியமறை பேசுகின்ற அவ்விடத்தே போகேல்
ஒருவியுதிர்ந் திட்டமயி ரொன்றிற்—பொருகின்ற

மேழகக்காற் றாளுடனே வேசரிகாற் றூள்முதல
வாழ்வுடையாய் மேல்வீழில் வாழ்வுகெடும்—தாழ்வில்லாத்

தீபநிழல் மெத்தைநிழல் சேர்மா னிடவர்நிழல்
மாபெரிய தான்றிநிழல் மன்னாதே—பாபமதாம்

கைநகத்தி னீரும் கருங்குழல்நீ ரும்மயலார்
மெய்யில் தெறித்திடிலோ மேன்மைகெடும்—மொய்யொளிசேர்

அக்கினிமேற் பாதம் அமர்ந்திடநீ காயாதே
மிக்கவா யாலூதின் மேவுமறு—தக்கதெனத்

தீயைக் கடந்திடலும் தீயதனை யுந்திக்கீழ்
ஏயதெனத் தாங்குதலு மேலாது—தீயினையே

ஒன்றொடொன்று சேர்த்துதலும் ஒண்காத்தி னல்முறத்தால்
முன்றானை யால்வீசி மூட்டுதலும்—துன்றடுப்பில்

நீர்விட் டவித்தலுமே நீர்மையில வாமென்று
கார்விட்ட மின்னனையாய் கட்டுரைத்தார்—சீராக

தோயம் பருகுந் தாகத்தின் கண்ணுடாத
மேய கரியிடத்தும் மேல்வீழும்—சேவிடத்தும்

கிட்ட நெருங்கிடினே கேடுவரு மீதறிவாய்
மட்டுவார் கூந்தல் வனக்குயிலே—உட்டெளிவில்

ஐயப் படுமிடத்து மன்பர் இலாவிடத்தும்
எய்துதலோ என்று மிழிவாகும்—துய்யபெருந்

தேவ குலமதினுந் தேசிகன் தன்னிடத்தும்
ஆவலாய்ப் பிள்ளைகள்சே ரவ்விடத்தும்—மேவியநல்

மேலோர்தங் கண்ணும் வெறுங்கையோ டுற்றிடுதல்
சேலார் விழியாய் சிறப்பிலையால்—மாலாகத்

தன்னையழைக் காவிடத்திற் சாருதலும் வஞ்சமிருந்
துன்னரிய நட்புந் துயர்விக்கும்—பொன்னே

பணியா ளொடுஞ்சூதின் பண்பறிவா ரோடும்
கணிகையர்த மோடுமிடக் கையால்—பணிசெய்வார்

தம்மோடும் நட்புற்றால் சாற்றுதற்கா காதுன்பாம்
அம்மா வெறும்பேச்சு மாகாது—செம்மையொடு

தானிருந்த ஆசனத்தைத் தள்ளி உதைத்திடுதல்
மேனிவந்த கேசத்தை வெண்பல்லாற்—றான்கறித்தல்

காலொடுகால் தேய்த்துக் கழுவுதல் ஈமத்தின்
மேலிட்ட தூயமதை மேற்கொள்ளல்—ஞாலமதில்

இந்தவித மெல்லா மியற்றியிடிற் றீதாகும்
சந்தச் சிலைப்புருவத் தையலே—பந்தமாய்

நித்திரைசெய் வேலைதனி னீயா ரையுமெழுப்பேல்
மெத்த நகமதனை மென்கையினும்—கத்தியே

செவ்வா யினுங்கிழியேல் செவ்வியாய் மண்கட்டி
ஒவ்வாத் துரும்புமுதல் ஒன்றனையும்—ஒவ்வொரு

காரணத்தி னன்றிக் கனக்குழாய் தூளாக்கேல்
தாரணியி லெவ்வுயிரும் தான்சமமாம்—சோகற்றும்

கோப மிருந்தாற் குறைவிலாச் சத்துருவும்
ஆபத்திற் றாங்குகின்ற அந்நட்பு—சோபிதமாய்

மேவின் மருந்தும் வெறும்பொய்யர் நட்பிருந்தால்
பாவமும்வே றுண்டோ பணிமொழியே—நாவின்மறை

நாவின் சிரத்தொளிரும் நற்கமலை மாருதிதன்
வாலி லெரிதணித்த வண்மையறி—மேலான

ஆண்டான் திருவரங்க னூர்பதத்திற் சேர்ந்துய்ந்த
ஆண்டாள் பெருமையினை யாய்ந்தறிவாய்—வேண்டியதைச்

சிந்தியாச் சேய்க்கொலைக்குச் சிந்தை யொருப்பட்ட
சந்தியா வல்லி தகைமையறி—பந்தமாய்ச்

சுந்தரமார் சேயோடு தூமறையோற் காளான
சந்திரம திக்கற்பின் தன்மையறி—முந்தியதோர்

திண்ணகில மெல்லாஞ் சிறப்பாகச் சொல்கின்ற
கண்ணகிதன் கற்பைக் கருதுவாய்—வெண்ணிறத்துக்

கொக்கா நினைத்தனையோ கொங்கணவா என்றுரைத்த
மிக்கான வாசுகியின் மேன்மையறி—தக்காவி

நற்பரியே யைத்தடுத்த நங்கை நளாயனியாங்
கற்பாசி சீர்த்தி கருதுவாய்—சொற்பெரிய

தூய கடவுளரைச் சுந்தரச்சே யாக்குமநு
சூயைபுகழ் தேர்வாய் சுகமருளென்—றேயு

மமயந் திருக்குடைய அவ்வேடற் றீத்த
தமயந்தி கற்பையறி தையால்—சமைகணவன்

ஆவித் திரிகயிற்றால் யாக்குமெம னைச்செயித்த
சாவித் திரிநிறையின் சாரமறி—மேவியதோர்

இவ்வண்ணம் நன்னீதி யெல்லாமுன் சிந்தையிற்கொண்
டவ்வண்ண மேயொழுகின் யாரும்நினை—யொவ்வுவரோ

பன்மகங்கள் செய்த பலனுண்டாம் பன்னரிய
நன்மகவு முண்டாம் நலமுண்டாம்—இன்பமெலாம்

உண்டாம் புகழ்மிகவு முண்டாம் அருஞ்சித்தி
யுண்டாம் பெருமுத்தி யுண்டாமால்—தண்டாதிவ் 160

வண்ணம் பெருமைபெற வாழ்ந்து நலம்பெற்றே
எண்ணிய எண்ணியாங் கெய்தியே — நண்ணியதோர்
அன்றிவினை யென்னவுன தாணழக னோடென்றும்
ஒன்றியிருப் பாய்நீ யுவந்து. 162

---

## வாழ்த்து

உலகநலத் திற்கா யுழைப்போர்கள் வாழி
மலைவகலுஞ் செந்தமிழ்தான் வாழி — பலகலையும்
கற்றாய்ந்து நன்னெறியைக் கைப்பிடித்துக் கற்புவழி
யிற்றோய்ந்தார் வாழி யிசைந்து.

---

## மாதர்நீதிக் கலிவெண்பா

முற்றிற்று

# அரும்பதவுரை

(1—5) மஞ்ஞை யியலியே - மயில் (போன்ற) சாயலையுடையவளே; நற்குணங்கள் நாலுடையாய் - நல்ல குணங்களாகிய (நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்கின்ற) நான்கு குணங்கள் உடையவளே.

(6—10) இமயப் பெண்ணு மருமடந்தை - பார்வதி; நான்மடந்தை- சரசுவதி.

(11—15) சேமமாய் - இன்பமாய்.

(16—20) மைஇல் - குற்றம் இல்லாத; கைதவம் - வஞ்சனை; வன்மம் - வைராக்கியம்; ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன்; இங்குக் கேள்வனுக்காயிற்று.

(21—25) ஆங்கண் - அவ்விடத்து; கொண்டான் - தன்னைக் கொண்டவன், கணவன்; பரத்தையர் - பொதுமகளிர்; தண்டாது உறையின்- நீங்காதிருப்பின்; வெருக்கொளுமாறு - அச்சமுறும்படி; காய்ந்து - கோபித்து.

(26—30) சேடம் - மிகுதி; மகிழ்நன் - மகிழ்ச்சியைத்தருவோன், கணவன்; கூர் - மிகுதி.

(31—35) மட்டடங்கா - அளவுக்கடங்காத; நச்சோ - விஷமோ; அச்சோ - இரக்கத்தைக் காட்டும் ஓர் இடைச்சொல்.

(36—40) இலம்பட்டான் - தரித்திரமடைந்தவன்; சலம்பட்ட - கோபம் மிகுந்த; நேர்த்தி - திருத்தமுள்ளது; எதிர்மாற்றம் - வினவெதிர் மறுத்து உத்தரங்கூறல்.

(41—45) அரி - சிங்கம் (எழுவாய்); இங்கிதமாய் - குறிப்பாக; ஆன்ற - மாட்சிமைப்பட்ட; சான்ற - அறிவின்மிக்க; திருவளரும் மார்பன்- திருமால்.

(45—50) சேவை - ஊழியம்; தொழுத்தை - அடிமைப்பெண்; பேதைமை - அறிவின்மை; அயல்இல் - பக்கத்துவீடு; அயர்ந்தும்-மறந்தும்.

(51—55) பேணி - விரும்பி; மறைச்சொல் - இரகசிய வார்த்தை; போற்றற்கு - காப்பாற்றுதற்கு; நத்தும் - விரும்புகின்ற; விதனம் - துன்பம்; ஒருவாய் - ஆய்ந்து தெரிந்துகொள்வாய்.

(61—65) படிறர் - பொய்யுரைப்போர்; விந்தை - ஆச்சரியம்; பீடாய் - பெருமையாக.

(66—70) மேற்றேய்வை - உடல் மேலே தேய்த்துக்கொள்ளும் பொருள்; இது பல பொருள்களுக்காயினும் இங்குத் தீங்கு விளைத்திடும் என்ற அடைமொழியால் சோப்பு, மூக்கப்பவுடர் முதலிய பொருள்களுக் காயிற்று. தென் - அழகு; எற்கு - எனக்கு.

(71—75) உவா - அமாவாசை பூரணை இரண்டுக்கும் பெயர்; இவ் இரண்டும் மாறி மாறி வருவதுபோல நன்மைதீமை வரும் என்பதாம்; கோட்டம் - அநீதி; கோணுதலுடையது.

(76—80) கவ்வைநிலவ - சத்தமுண்டாக; பொன் - அழகு; வெந் நோயர் - கொடுமையான நோயாளரை; இரண்டனுருபு தொக்கது.

(81—85) பொய்க்கோள் - வஞ்சம்; சாந்து - கறிச்சாந்து.

(86—90) உன் இல் - உன்வீட்டில்.

(91—95) சலனம் - அசைதல் ; இங்கு கலக்கத்திற்காயிற்று; அங் காந்து - வாய்திறந்து; ஆதுலர் - யாசகர்.

(96—100) உன்னில் - உன்னைப்பார்க்கினும்; மகிழ்தேக்கு - மகிழ்ச் சியை நிரப்பு; சந்தோஷத்துடனிரு என்பதாம்.

(101—105) எவ்வம் - துன்பம்; குறங்கு - தொடை; சாயை - நிழல்; தூசு - ஆடை.

(106—110) சேந்தது - சிவந்ததென்பதன்திரிபு, உகிர் - நகம்; பணி - ஆபரணம்; பூண் - ஆபரணம்.

(111—115) பணி - வேலை; தேம்பல் - மெலிதல்; ஆம்பல் - செவ் வல்லி; தெவ்வர் - பகைவர்; அமாத்தியர் - மந்திரிமார்; தொழுத்தை - வேலைக்காரி.

(116—120) மஞ்சைச் சிவண - மேகத்தை ஒக்க.

(121—125) மறை - இரகசியம்; ஒருவி - நீங்கி; ஒன்றில் - பொருந் தில்; மேழகம் - ஆடு; வேசரி - கழுதை.

(126—130) தான்றி - ஓர் மரம்.

(131—135) தோயம் - நீர்; துரகதம் - குதிரை; கரி - யானை; மட்டு - தேன்; தேவகுலம் - கோயில்; தேசிகன் - ஆசாரியன்.

(136—140) தங்கண்ணும்-தம்மிடத்தும்; கண் ஏழனுருபு; மாலாக- பெருமையாக; துயர்விக்கும் - துயரத்தையுண்டாக்கும்; மேல் நிவந்த கேசம் - மேலுயர்ந்த மயிர்.

(141—145) ஈமம் - சுடுகாடு.

(146—150) சோபிதம் - அழகு; தா இல் - கெடுதல் இல்லாத; மறை - வேதம்; சிந்தியா - சிந்தித்து; உடன்பாட்டுவினை.

(151—156) எயுமமயம் - சேரும்வேளை; வேடன்தீத்த - வேடனைச் (சக்கற்பின்தழலால்) சுட்டெரித்த; இரண்டனுருபு தொக்கு வலித்தல் விகாரமாயிற்று.

(157—162) யாக்கும் - கட்டுகின்ற; ஒன்றியிருப்பாய் - (உடல் உயிர் என்னக் கேள்வனொடு) பொருந்தி வாழ்வாய்; உவந்து - சந்தோஷித்து.

அரும்பதவுரை முற்றிற்று.

